# முன்னுரை

“மின் மினி ஹைக்கூ” ஹைக்கூ வடிவில் என் முதல் புத்தகம் .பெரும்பாலும் ஹைக்கூ கவிதைகள் வெவ்வேறு தலைப்புகளை உள்ளடக்கி தொகுக்கப்பட்டவைகளாக உள்ளது .அதில் இருந்து சற்று மாறுபடும்விதமாக சராசரி மனிதனின் ஒருநாள் நிகழ்வுகளின் காட்சிகளை வரிசைப்படுத்தி வரைகிறேன்.

எதார்த்தமனிதனின் சலிப்பான வாழ்க்கையில் மாற்றம் காண முயல்கிறான் .எனினும் அக் கனவுகள் யாவும் மின்மினியாய் சிறு இன்பங்களை தூவி கனவாகவே கரைகிறது .சுற்றமும் சூழலும் மாறும் வரை நம் மாற்றம் பெரும் பலன் தராது என்பதின் ஒற்றை வரியே மின் மினி ஹைக்கூ.

கருவுற்ற நிலா
பெற்றெடுத்தபிள்ளை

அதிகாலை ...!

கத்தி இல்லா ரத்தம் இல்லா
தினம் ஒரு கொலை

தினசரி காலண்டர் ...!

பால் கலந்த மது
விடமுடியா பெரும்போதை

காபி ...!!!!

செயற்கை மேகங்கள்
ஆள் நனைக்கும் அற்ப தூறல்

குளியல் ...!

எனக்கு வாய்த்த அடிமை
சலிக்காமல் என்னை ரசிக்கும் ரசிகன்

முகக்கண்ணாடி ...!

பணம் தேடிப்பயணம்
தினம் மேற்கொள்ளும் அமிலச்சோதனை

பணிப்பயணம் ...!!!

விலைவாசி உயர்வின் தத்துப்பிள்ளை
தினம் ஏறி இறங்கி விளையாடும் செல்லப்பிள்ளை

பெட்ரோல் ...!!!

முன்னேறி முன்னேறி
மூவண்ண விளக்கில் முற்றுப்பெற்றோம்

போக்குவரத்து நெரிசல் ...!!!

அனல் காற்றின் நடுவில்
அசைந்து வீசும் பனி காற்று –அவள்

சுடிதார் தென்றல் ...!!!

கோப்புகளை சிறகுகளாய் விரித்து
கடிகாரக்கூண்டில் அடைபட்ட பறவை

அலுவலகம் ...!

மூச்சடக்கி செய்யும் தவம்
சிலசமயம் மூச்சுத்திணறவைக்கும் அவசரநிலை

வாழ்க்கை ...!!!

விளம்பரமில்லா நெடுந்தொடர்
விம்மிநிற்கும் கவலை கண்களில்

சலிப்பு ...!!!

இரு இணையின் விவாகரத்து (கடிகாரமுள்)
இதழ்களில் புன் சிரிப்பு

பணி நேரம் நிறைவு ...!!!

வழிவகுத்து நடக்கிறேன்
இருந்தும் வளைந்து கொடுக்கிறேன்

கேள்விகள் ?...!

இரு கல் மூட்டும் தீ
ஆறாம் அறிவின் காதல்

சிந்தனை ...!!!

திருத்துகிறேன் எழுத்துப்பிழை
அச்சடிக்கப்பட்ட புத்தகத்தில்

மாற்றம் ...!

ஒருவழி சாலை
பின்னோக்கி பயணிக்கும் இதயம்

புதுப்பாதை ...!

எரிந்த காட்டில்
அணையா ஒற்றை தீக்குச்சி

செயல்...!

வழித்துணையாய் தனிமை
மனமோடு மௌன உரையாடல்

நடைபயணம் ...!

சுமைதாங்கும் தொழிலாளி
சுமக்கமுடியா சுமை

விலைவாசி...!

உயிர் அணுவில் தொடங்கிய யுத்தம்
முடிவிலா தொடர்கதை

போராட்டம் ...!

கண் இருந்தும் குருடன்
உரிமையுள்ள அகதி

சமுதாயம் ...!

ரெட்டை நாக்கு பேச்சாளனின்
ஒற்றை சொல் மந்திரம்

பணம் ...!

கட்டாய அன்பளிப்பு
கண்ணுக்கு தெரியாத பிச்சை

லஞ்சம் ...!

அதீத மறதி
ஐந்தாண்டுக்கு ஒரு முறை ஏமாளி

மக்கள் ...!

ஆத்திகனின் கடவுச்சொல்
நாத்திகனின் கடுஞ்சொல்

கடவுள் ...!

அறியாமையே ஆயுதம்
மதியில்லா மக்கள் சக்தியே மூல மந்திரம்

போலிச்சாமியார் ...!

கலாச்சாரம் என்னும் கரு
இளமை என்னும் விபத்தின் கருச்சிதைவு

பண்பாடு ...!

சண்டை இல்லா கண்ணீர் இல்லா
இரு இணை பிரியும் தளம்

இணையத்தளம் ...!

சிக்குண்ட நூல்
முகவரி இல்லா மீன்களின் தூண்டில்

முகநூல்...!

வலுக்கட்டாய சிரிப்பு
ஒரு விரல் புகைப்படம்

செல்பி ...!

அடிபட்ட முதியவரின் செய்தி
அள்ளுகிறது ஆயிரம் லைக்குகள்

மனிதநேயம் ...!

சமத்துவமோ சமையல் அறையில்
நாகரீகமோ நடுத்தெருவில்

இன்றைய பாரதம் ...!

முற்று பெற்ற உலகம்
முயன்றால் முற்றுப்புள்ளியும் காற்புள்ளியாகும்

மாற்றம் ...!

அறிவுக்கு ஆயிரம் மொழி
வயிற்றுக்கு ஒரு மொழி

பசி ...!

ஆட்டைக் கொன்ற பாவம்
பரிகாரமாகும் வாழையிலை

அசைவ உணவு...!

பசியோடு பரிமாறியவனுக்கு
சில சில்லறைகளில் மனிதநேயம்

டிப்ஸ் ...!

ஒரு குடுவை போதையில்
பல அரிச்சந்திரன்கள்

மது ...!

ஊதுவது இன்றைய புகை
நாளைய சங்கு

சிகரெட் ...!

வெளியில் மட்டுமல்ல
சிலர் உள்ளங்களிலும்

இருள் ...!

இடைவிடாத சிந்தனை
இறுதியில் பிறந்தது

சோம்பல்...!

வீதியெங்கும் வெள்ளி ஒளி
எதிர் வீட்டு மாமா வின் கரண்ட் பில் மிச்சம்

நிலா ...!

நடந்தது கொஞ்சம்
கடந்தது அதிகம்

எதார்த்தம் ...!

ஓய்வு கொள்ளும் இமைக்கு
ஓயாத கனவுகள்

உறக்கம் ...!

மனம் உணரா சந்தர்ப்பவாதி
சமுதாய சிறையில் சூழ்நிலை கைதி

இன்றைய மனிதன் ...!

நிழல்களின் கதை
நித்திரையில் காணும் குறும்படம்

கனவு ...!

வைகறை ஒளி
கனவுகளின் அற்ப ஆயுள்

மின்மினி ...!

# ஆசிரியர் குறிப்பு

நான் விக்னேஷ். M . ஹைக்கூ படைப்பில் இது என் முதல் புத்தகம் .ஏதேனும் குறைகளோ பிழைகளோ இருப்பின் தயர்வுகூர்ந்து மன்னிக்கவும் .தங்களின் மேலான ஆதரவை எதிர்பார்க்கிறேன்

தொடர்புகொள்ள **:**
தொலைபேசிஎண் :**9626227537**
மின்னஞ்சல் : **vykkyvrisa @gmail.com**